



# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
32nd year
of Publication
11—6—1967


# பார்லிமெண்டும் பத்திரிகைகளும்

இந்தியாவில் பார்லிமெண்ட் வாரவிழா கொண்டாடப்படும் இந்தச் சமயத்தில் பார்லிமெண்ட் முறையின் வளர்ச்சியில் பத்திரிகைகள் வகித்துள்ள பங்கைக் குறிப்பிடுவது மிகவும் பொருத்தமாக இருக்கும். சுதந்திரப் பேற்றுக்கு முன்பு இருந்த மத்தியச் சட்டசபையிலும் ராஜ்ய சட்டசபைகளிலும் விவாதங்கள் இன்றுபோல அவ்வளவு விரிவாக இருக்கவில்லை என்றாலும், பிரிட்டன் விதித்த நிபந்தனைகளுக்குட்பட்டுத்தான் சட்டசபைகள் இயங்கி வந்தன என்றாலும் இந்தச் சட்டமன்றங்களில் நடந்த விவாதங்கள் பத்திரிகைகளில் இடம் பெற்றன. அரசியல் உணர்வு ஏற்படுவதற்கும் இறுதியில் பிரிட்டிஷ் ஆட்சி ஒழிவதற்கும் இது உதவி புரிந்தது.

பார்லிமெண்ட் நடவடிக்கைகள் வெளியிடப்பட்டு வந்ததன் மூலம் பொதுமக்களிடையே விவாதங்கள் நடந்தன. நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மீதான விவாதத்தைவிட அதிகமாக வேறு எதையும் ஒரு இந்தியர் நேசிப்பதில்லை என்று ஒருவர் வேடிக்கையாகக் கூறியிருக்கிறார்.

அரசியல் நிர்ணய சபை உருவானதிலிருந்தே பார்லிமெண்ட் நடவடிக்கைகளில் மக்கள் பெரிதும் அக்கறை காட்டி வருகிறார்கள். ஜனநாயக அமைப்பு உரியவிதத்தில் இயங்கவேண்டுமானால் சுதந்திரமான பத்திரிகைகள் மிகவும் அவசியமாகும். அரசாங்கம் நேரடியாகவோ மறைமுகமாகவோ, பத்திரிகைகள்மீது பார்லிமெண்ட் நடவடிக்கைகள் பற்றிய செய்திகளை வெளியிடும் விஷயத்தில் கட்டுப்பாடுகள் விதித்தால் பார்லிமெண்ட் அமைப்பு வளர முடியாது. பார்லிமெண்ட் நடவடிக்கைகள் விஷயத்தில் இந்தியாவில் எந்தவிதமான நிர்வாகத் தலையீடும் இல்லை என்பதை, 31 ஆண்டு அனுபவம்பெற்ற ஆசிரியர் என்ற முறையில் நான் மகிழ்ச்சியுடன் குறிப்பிட விரும்புகிறேன். ஒரு தடவை, பார்லிமெண்ட்டில் பெரிய வியாபாரி ஒருவரது செயல்களைப்பற்றி விவாதம் நடந்தது. இந்த விவாதத்தின்போது தெரிவிக்கப்பட்ட பல கருத்துக்களும் அவருக்குப் பாதகமாக இருந்தன. இருப்பினும் அவர் நடத்தும் ஒரு பத்திரிகை இந்த விவாதங்களை அப்படியே பிரசுரித்தது. இந்தியாவில் பத்திரிகைகள் சுதந்திரமாக இயங்குவதை இது சிறப்பாக எடுத்துக் காட்டுகிறது.

பார்லிமெண்ட்டில் உறுப்பினர்கள் அவ்வப்போது கேட்கும் கேள்விகள் பல. பத்திரிகைகளில் வெளியாகின்றன. அவசரமாக பஸ்ஸைப்பிடித்து அலுவலகத்துக்குச் சென்றுகொண்டிருக்கும் ஒருவர் இந்தக் கேள்விகளையும் பதில்களையும் முழுமையாகப் படிக்க முடியாமல் இருக்கலாம். ஆனால் கேள்வி நேரத்தின்போது பார்லிமெண்ட்டில் நடக்கும் நடவடிக்கைகளில் பொதுமக்கள் மிகவும் அக்கறை காட்டுகிறார்கள் என்பது நிச்சயம். ஒருதடவை, ராஜ்யசபாவில் ஒரு உறுப்பினர் இந்நாட்டில் பத்திரிகைக் காகிதத்தின் உற்பத்தி பற்றி ஒரு கேள்வி கேட்டார். போபாலில் திபெத்திய அகதிகள் அமைத்துள்ள காகித தொழிற்சாலையில் தயாராகும் பத்திரிகைக் காகிதத்தை இறக்குமதி செய்யப்படும் பத்திரிகைக் காகிதத்துடன் ஒப்பிட்டு நான் ஒரு துணைக் கேள்வி கேட்டேன். கேள்வியும் பதிலும் துணைக் கேள்விகளும் பத்திரிகைகளில் வெளியாயின. சென்னையிலிருந்தும் பம்பாயிலிருந்தும், இதன் காரணமாக எனக்கு பல கடிதங்கள் வந்தன.

இந்தக்காகிதத்தைப்பற்றி என்னிடம் பலரும் விவரங்கள் கோரினார்கள். மண்டபத்தில் இந்திய இனத்தவர் வேலையில்லாமல் இருப்பது பற்றி நான் இரண்டாண்டுகளுக்குமுன் கேட்ட ஒரு கேள்வி குறித்து இன்னமும் எனக்கு விவரங்கள் தெரிய வந்துகொண்டிருக்கின்றன. பொதுமக்களிடையே நிலவும் அதிருப்தி வெளிவருவதற்கான ஒருசந்தர்ப்பமாகத்தான் பார்லிமெண்ட் நேரத்தைக் கருதவேண்டும்.

பார்லிமெண்ட் கூட்டத் தொடர் நடக்கும் நாட்களிலெல்லாம் இந்தியப் பத்திரிகைகள் முதல் பக்கத்திலே இதுபற்றி செய்திகள் வெளியிடுகின்றன. பிரிட்டனில் நடுப்பக்கத்தில்தான் பத்திரிகைகள் பார்லிமெண்ட் பற்றிய செய்திகளை வெளியிடுகின்றன.

ஒருவிதத்தில் இந்தியப் பத்திரிகைகள் 1947 – க்கு முன்பிருந்த நிலைமைக்கு மீண்டும் சென்றிருப்பதாகவே கூறலாம். காங்கிரஸ் கட்சி மத்திய அரசாங்கமாக 20 ஆண்டுகளுக்கு மேல் ஆட்சிபுரிவதால் பிரிட்டிஷ் அரசாங்கத்தைப் போலவே இதையும் அகற்றமுடியாத அரசாங்கமாகக் கருதுகிறார்கள். ஆதலால் என்றாவது ஒருநாள் பார்லிமெண்ட்டில் மந்திரிகளுக்கு எதிராகக் கருத்துத் தெரிவிக்கப்படும் போதும் சில இலாகா அதிகாரிகளின் திறமையின்மையை வெளிப்படுத்தும் போதும் நாட்டு மக்களுக்கு பரபரப்பூட்டும் செய்திகள் வந்த வண்ணம் இருக்கின்றன. ஏதோ ஜேம்ஸ்பாண்டின் திரைப்படம் ஒன்று திரையிடப்படுவது போன்ற ஒரு உணர்ச்சி.

[8-ம் பக்கம் பார்க்க]

# HE TIRUCHY UNITED BANK LIMITED, TIRUCHIRAPALLI. Balance Sheet as at 31st December, 1966.

| 1965 Rs. Ps. | CAPITAL AND LIABILITIES | Amount Rs. Ps. | Total Rs. Ps. |
|---|---|---|---|
| | 1. CAPITAL: | | |
| | Authorised Capital: | | |
| ,000,00 00 | 8,000 Shares of Rs. 50/- each ... | 4,00,000 00 | |
| | Issued Capital t (Shares issued for payment in cash) | | |
| 2,13,820 00 | 4227 Shares of Rs. 50/- each ... | 2,13,820 00 | |
| | Subscribed Capital: | | |
| 2,13,820 00 | 4227 Shres of Rs. 50/- each ... | 2,13,820 00 | |
| | Called and Paidup Capital | | |
| 2,13,820 00 | 4227 Shares of Rs. 50/- each | 2,13,820 00 | 2,13,820 00 |
| 2,13,820 00 | Includes Rs. 245/- being the value of share couponda yet to be converted as fully paid shares | | |
| | 2. RESERVE FUND AND OTHER RESERVES: | | |
| 2,84,374 30 | (Reserve Fund Rs. 305,044) ... | | 3,05,044 30 |
| | 3. DEPOSITS AND OTHER ACCOUNTS: | | |
| 33,50,675 00 | Fixed Deposit ... | 35,88,900 00 | |
| 19,200 00 | Staff Security Deposits ... | 19,950 00 | |
| 1,41,270 00 | Recurring Deposits ... | 1,58,670 00 | |
| 3,33,023 77 | Savings Bank Deposits ... | 3,69,913 03 | |
| | Current Accounts, Contingency | | |
| 3,86,829 11 | Accounts etc., ... | 4,02,334 95 | 45,39,767 98 |
| 42,30,997 88 | | | |
| | 4. BORROWINGS FROM OTHER BANKING COMPANIES AGENTS Etc., | | |
| | 1. In India Nil | | |
| | 2. Outside India Nil | | |
| | Particulars: | | |
| | 1. Secured Nil | | |
| | 2. Unsecured Nil | | |
| | 5. BILLS PAYABLE: | | |
| | 6. BILLS FOR COLLECTION BEING BILLS RECEIVABLE AS PER CONTRA: | | |
| 150 00 | 1. Payable in India ... | 14,320 93 | 14,320 93 |
| | 2. Payable outside India Nil | | |
| | 7. OTHER LIABILITIES: | | |
| 5,782 96 | 1. Undrawn Dividends ... | 5,824 06 | |
| 74,888 58 | 2. Interest payable to Fixed Deposits ... | 80,814 78 | |
| 7,882 14 | 3. Interest payable to Recurring Deposits ... | 9,308 93 | |
| 4,919 84 | 4. Suspence ... | 6,694 76 | |
| 546 88 | 5. Advance collection of Interest ... | 10 65 | |
| 500 00 | 6. Audit Fees due ... | 750 00 | |
| 7,480 19 | 7. Incom-tax Provision A/c. ... | 46,000 00 | |
| 635 69 | 8. Liabilities for expences ... | 891 60 | |
| 13,759 11 | 9. Provision for depreciation on Investments ... | 13,759 11 | |
| 1,412 30 | 10. Provision for staff Gratuity ... | | |
| 9,393 72 | 11. Provision for Bad & Doubtlfu Debts ... | 9,393 72 | |
| 1,27,201 41 | 12. Advance House rent ... | 50 00 | |
| | 13. Branch Adjusment ... | 8 00 | 1,73,517 61 |
| | ~~8. ACCEPTANCES, ENDORSE~~MENTS AND OTHER OBLIGATIONS PER CONTRA: Nil | | |

| 1965 Rs. Ps. | PROPERTY AND ASSETS | Amount Rs. Ps. | Total Rs. Ps. |
|---|---|---|---|
| | 1. CASH: | | |
| 1,71,316 95 | In hand and with Reserve Bank and State Bank (Inclnidng foreign currency notes) | | 2,16,298 43 |
| | 2. BALANCE WITH OTHER BANKS: | | |
| | (i) in India | | |
| 20,16 05 | (a) on Savings Deposits ... | 985 75 | |
| 38,132 40 | (b) ou Current Account .. | 43,526 43 | |
| 22,250 00 | (c) on Fixed Deposits .. | 19,950 00 | |
| | (ii) Outside India Nil | | |
| 62,398 45 | | | 64,462 18 |
| | 3. MONEY AT CALL AND SHORT NOTICE: Nil | | |
| | 4. INVESTMENT: (at cost or below) | | |
| 11,02,157 67 | (i) Securities of the Central and State Government and other Trustee Securities including Treasury Bills of the Central and State Governments. ... F. V. Rs. 12,15,200 00 M V. Rs. ——— | 12,01,657 67 | |
| 1,681 00 | (ii) Shares fully paid Quoted Preference Rs. 330 M. V. Rs 227—04; Ordinary Rs. 1,350 M. V. Rs. 1,395—15; Unquoted Ordinary Re. 1 | 16,81 00 | |
| | (iii) Debenture or Bonds Nil | | |
| | (iv) Other Investments Nil | | 12,03,338 67 |
| 11,03,838 67 | (v) Gold Nil | | |
| | 5. ADVANCES: (Other than bad and doubtful debts for which provision has been made to the satisfaction of the auditor) | | |
| 33,50,822 02 | (1) Loans, Cash Credit, Over drafts etc., | | |
| | (i) In India | 36,03,565 13 | |
| | (ii) Outside India Nil | | |
| | (2) Bills Discounted and Purchased (excluding Treasury Bills of the Central and State Governments. | | |
| 150 00 | (i) Payable in India Nil | | |
| | (ii) Payable outside India Nil | | 36,03,565 13 |
| | PARTICULARS OF ADVANCES: | | |
| 33,50,824 02 | (i) Depts Considered good in respect of which the Banking Company is fully secured. .. | 36,03,565 13 | |
| | (ii) Depts considered goo for which the Banking Company holds no other security than the debtors' personal security. Nil | | |
| | (iii) Depts considered good, secured by the personal liabilities of one or more parties in addition to the personal security of the Debtors. Nil | | |
| | (iv) Debts considered doubtful or bad, not provided for. Nil | | |
| | (v) Debts due by Diréctors or Officers of the Banking Company or any of them either severally or jointly with any other persons. Nil | | |
| | (vi) Debts due by Companies or firms in which the Directors of the Banking Company are interested as Directors, Partners or Managing Agents, or in the case of private companies as member. Nil | | |
| | (vii) Maximum total amount of advances. including temporary advances made at any time during the year to Directors or Managers or Officers of the Banking Company or any of them either severally or jointly with any other persons. Nil | | |
| | (viii) Maximum total amount of advances, Including temporary advances, granted during the year to the companies r firms in which the Directors of the Banking Company are interested as Directors, partners or managing agents or in the case of private companies as members Nil | | |
| | (ix) Due from Banking Companies. Nil | | |
| | 6. [illegible]LLS RECEIVABLE BEING BILLS FOR COLLECTION AS PER CONTRA | | |
| 150 00 | (i) Payable in India ... | 14,320 93 | |
| | (ii) Payable outside India Nil | | 14,320 93 |
| | 7. CONSTITUENTS' LIABILITIES FOR ACCEPTANCES ENDORSEMENTS AND OTHER OBEICATION PER CONTRA: Nil | | |

**திருச்சி யுனைடெட் பாங்க் லிமிடெட்**

தென்னூர், திருச்சிராப்பள்ளி-1.

1966-ம் ஆு டிசம்பர்-மீ 31-உ யோடு முடிவுற்ற 82-வது ஆண்டிற்குரிய தணிக்கை செய்யப்பட்ட கையிருப்புச் சீட்டையும், லாப நஷ்டக் கணக்கையும், ஆடிட்டர் ரிப்போர்ட்டையும் பங்குதாரர் களின் அங்கீகாரத்திற்கு வைக்கப்பட்டிருக்கிறது.

1966-ம் வருடத்திற்கு சிப்பந்திகளுக்கு தீபாவளி போனசாக 2 மாதச் சம்பளம் ரூ. 10,098-22 கொடுக்கப் பட்டுள்ளது. அதைத் தவிர, இத்துடன் இணைக்கப்பட்டிருக்கும் தணிக்கை செய்யப் பட்ட கையிருப்புச் சீட்டின் படி வருமான வரிக்காக ரூ. 46,000-00 ஒதுக்கி வைக் கப்பட்டபின், நிகர லாபமாக ரூ. 51,317-15 கிடைத்துள் ளது. இ லாபத்தொகையை பாங்கின் நிர்வாக சபையார் கீழ்க்கண்ட முறையில் பிரிவினை செய்யலாமெனத் தீர்மானித்திருக்கிறார்கள் :—

காப்பு திரவியத்திற்கு ரூ. 10,300-00

இன்வெஸ்ட்மெண்ட் விலை குறைவுக்கு ஒதுக்கியது ரூ. 450-00

பங்குதாரர்களுக்கு 12 சதவீதம் (வருமான வரியுடன்) டிவிடெண்ட் ரூ. 25,662-00

காரியதரிசிக்கு போனஸ் (1 மாதசம்பளம் 3 மாத அலவன்ஸுடன்) ரூ. 455-00

இதர சிப்பந்திகளுக்கு போனஸ் (3 மாத சம்பளம்) ரூ. 14,440-18

தென்னூர் உயர்தர எலிமெண்டரி பாடசாலைக்கு நன்கொடை ரூ. 9-97

மொத்தம் ரூ. 51,317-15

பாங்கின் டைரக்டர் - பிரசிடெண்ட் ஆக சென்ற 27 வருஷ காலமாக அங்கம் வகித்து வந்த திரு. T. P. வேதாசலம் B.A. அவர்

# பருத்திக்கோட்டை எண்ணெய்

சமையலுக்கு உதவும் பருத்திக்கொட்டை எண்ணெயின் உற்பத்திபெரிதும் அதிகமாவதற்கு உரிய வழிவகைகளைக்காண இப்போது சென்னைப் பல்கலைக் கழகம் ஓர் ஆராய்ச்சி மேற்கொண்டிருக்கிறது.

இந்தியாவில் இரண்டு கோடி ஏக்கர் பருத்தி விளையும் பூமி இருந்தும், பருத்திக்கொட்டையின் வளமெல்லாம் இன்னும் நன்கு பயனுக்கு வரவில்லை. இன்றைய முறைகள், எண்ணெய் முழுவதையும் எடுப்பதில்லை; பிண்ணாக்கிலேயே நிறைய எண்ணெய் நின்று விடுகிறது. இவ்வாறு எண்ணெயைத் தங்கவிடாமல் எடுத்துவிடக்கூடிய வழிவகைகளைக் காண்பதுதான் சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஆராய்ச்சி அமெரிக்க அரசாங்கம் ரூ. 3,33,080 மானியம் வழங்குகிறது.

அழகப்ப செட்டியார் தொழில்நுட்பக் கல்லூரி டைரக்டரும் அங்கு ரசாயனப் பொறியியல் துறைத் தலைவருமாகிய டாக்டர் ஜி. எஸ். லத்தாவின் தலைமையில் இந்த ஆராய்ச்சி நடைபெறும். இதற்கு வேண்டிய அடிப்படை ஆராய்ச்சி சில ஆண்டுகளுக்கு முன்பே நடைபெறலாயிற்று. அதை நடத்தியவரும் அவரே.

சமையலுக்கு உதவும் எண்ணெய் வகைகளை எடுப்பதற்கு ரசாயனக் கரைமங்களைப் பயன்படுத்தலாம் என்று இந்த மார்ச் மாதம் இந்திய அரசாங்கம் முடிவு செய்ததால், எண்ணெய் எடுக்கும் முறைகள் மேம்படுவதற்கு நிறைய வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. (கரைமம் என்பது இன்னொரு பொருளைத் தன்னுள் கரைத்து வைத்திருக்கும் பொருள்.

இந்தியாவில் இந்த மார்ச் மாதத்துக்கு முன்பெல்லாம் ரசாயனக் கரைமங்களைப் பயன்படுத்திச் சமையல் எண்ணெய் எதையும் எடுக்கக்கூடாது என்ற தடை இருந்தது. மக்கள் உணவாகக் கொள்ளக்கூடிய எண்ணெய் வகைகளை எடுப்பதற்குச் செக்கு முதலிய கருவிகளால் எண்ணெய் வித்துக்களை நசுக்கிப் பிழிவது ஒன்றுதான் முறையாக இருந்தது. ஆனால் இவ்வாறு நசுக்கிப் பிழியும் முறையிலே பிண்ணாக்கில் நிறைய எண்ணெய் தங்கிவிடும்; பயன்படக்கூடிய எண்ணெய் பெரிதும் கைக்கு எட்டாமலே போய்விடும்.

அமெரிக்கா முதலிய பல நாடுகளில் எண்ணெய் எடுப்பதற்கு ரசாயனக் கரைமங்களைப் பயன்படுத்துகிறார்கள். அந்நாடுகளின் அனுபவத்தைக் கவனமாக கண்டறிந்த பிறகுதான், இந்திய அரசாங்கம் ரசாயனக் கரைமங்களால் ஆபத்து இல்லை என்று ஒப்புக்கொண்டுள்ளது. கரைமங்களால் எடுத்த எண்ணெயைச் சுத்தம் செய்து, நாற்றம் நீக்கவேண்டும்; அதற்கெல்லாம் கண்டிப்பான விதி முறைகள் உண்டு.

சென்னைப் பல்கலைக்கழக விஞ்ஞானிகள் இரண்டு நோக்கங்களை மனதில் ஆராய்ச்சி செய்வார்கள். பருத்திக்கொட்டைப் பிண்ணாக்கிலிருந்து குறைந்த செலவில் சிறந்த எண்ணெய் நிறையக் கிடைக்க வேண்டும்; இதற்கு இன்றைய ரசாயனக் கரைமங்களைக் காட்டிலும் சிறப்பாக உதவக்கூடிய கரைமங்களைக் கண்டுபிடிப்பது ஒரு நோக்கம். எண்ணெயிலிருந்தும் பிண்ணாக்கிலிருந்தும் எளிதில் ஆவியாக்கிப் பிரித்துவிடக்கூடிய கரைமங்களை மீண்டும் மீண்டும் எண்ணெய் எடுப்பதற்குப் பயன்படுத்தத்தக்க வழி காண்பது இன்னொரு நோக்கம்.

எள், வேர்க்கடலை, கடுகு, ஆளிவிரை, ஆமணக்கு இவை ஐந்துமே இந்தியாவின் எண்ணெய் வித்துக்களில் தலையாய ஐந்து. உலகத்திலேயே இந்தியாவில்தான் பருத்தி விளையும் நிலப்பரப்பு மிக அதிகம். இருந்தும்கூட, பருத்திக் கொட்டைக்கு இந்தியாவின் ஐம்பெரும் எண்ணெய் வித்துக்களின் வரிசையில் வைத்து எண்ணத்தக்க பெருமை ஒருநாளும் கிடைக்கவில்லை. பஞ்சுக்காகத்தான் பருத்தி; பருத்திக்கொட்டை அதற்கு ஊடே வரும் ஒன்று, என்ற நிலைமைதான் இருந்து வந்துள்ளது, 1965க்குப் பிறகுதான் பருத்தி விதையிலிருந்து மக்கள் உண்ணத்தக்க எண்ணெய் எடுத்து வழங்கத் தொடங்கினார்கள். தொன்றுதொட்டு இந்தியாவில் பருத்திக்கொட்டை மாட்டுக்கு வைக்கும் தீனியாகவே உதவியுள்ளது.

பருத்திக்கொட்டையிலிருந்து எண்ணெயை எடுத்துவிட்டுப் பிண்ணாக்கை மட்டும் தீனியாக வைப்பதைவிட, பருத்திக் கொட்டை முழுவதையும் வைத்தால்தான் மாட்டுக்கு நல்லது என்று விவசாயிகள் நினைக்கிறார்கள். ஆனால் பருத்திக்கொட்டைப் பிண்ணாக்கில் நிறையப் புரதச் சத்து இருக்கிறதே. கரைமங்களைப் பயன்படுத்தி எண்ணெய் அனைத்தையும் பிரித்து எடுத்துவிட்டாலுங் கூடப் பருத்திக்கொட்டைப் பிண்ணாக்கில் புரதச் சத்து ஏராளமாக இருக்கும்.

பருத்திக்கொட்டைப் பிண்ணாக்கு புரதச்சத்து மிக்கது; மலிவாகக் கிடைப்பது; ஆதலால், மக்களுக்கு முக்கியமாகச் சிறுவர்களுக்கு சத்துணவுப் பற்றாக் குறையைப் போக்கும்படி புதிதாகத் தோன்றியுள்ள சிறந்த துணை உணவுகளைத் தயாரிப்பதற்கு அது முதன்மையாக உதவக் கூடும்.

புதிய துணை உணவுகளில் ஒன்று, பால ஆஹார் என்பது. (பருத்திக்கொட்டைப் பிண்ணாக்கு போன்ற) தாவரப் புரதங்கள், தானியங்கள், வைட்டமின்கள், உப்புக்கள் ஆகியவை கலந்த சத்தான ஓர் உணவுப் பொருளுக்குத்தான் பால ஆஹார் என்று பெயர் வைத்திருக்கிறார்கள். இதை கஞ்சியாகக் காய்ச்சிச் சிறுவர்களுக்கும் கைக் குழந்தைகளுக்கும் பாலுக்குப் பதிலாகக் கொடுக்கலாம். பீகாரிலும் உத்தரப் பிரதேசத்திலும் வறட்சியால் வாடும் பகுதிகளில் பஞ்சத்தை விரட்ட இந்த

[6-ம் பக்கம் பார்க்க]





ஒளி : 32 | ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தொறும் | 1967
இதழ் : 29 | தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே | ஜூன் : 11


# செய்தித்துறை

அரசங்கத் தகவல் இலாகாவில் பல அலுவல்களைக் குறைத்து ஆட்குறைப்பும் செய்து வருகிறது ராஜ்ய அரசாங்கம். வெட்டிச் செலவும் வீண் ஆடம்பரமும் கொண்ட ராஜ்ய அரசாங்கத் துறைகளில் முக்கியமானது செய்தித் துறைதான்.

செய்தித்துறை மூலமாகப் பொதுமக்களுக்கு என்ன தகவல்கள் கிடைக்கிறதென்று விசாரித்துப் பார்த்தால்தான் இது ஒரு தண்டச் செலவு இலாகா என்பது விளங்கும். ஏதோ சில புத்தகங்கள், மாதாந்திர சஞ்சிகைகள் அச்சடிப்பது அது யார்யார் கைக்குச் சேரவேண்டுமோ அவர்கள் கைக்குப் போகாமல் கவனித்துக் கொள்வது தவிர இவர்களுக்கு வேறு வேலை கிடையாது. தபால் எழுதிக் கேட்டால் கூட எந்தத் தகவலும் கொடுக்கும் ஏற்பாடு எதுவுமில்லாத கேலிக் கூத்து இலாகா இது.

அரசாங்கப் பணிகளைப் பற்றிப் பிரசாரம் செய்வதற்கு அரசாங்கத்தை மேற்கொண்டு நடத்தும் அரசியல் கட்சிதான் முன்வர வேண்டும் ஏனென்றால் அரசாங்கம் வேறு, கட்சி வேறு என்ற விவஸ்தை நம் நாட்டில் எந்தக் கட்சிக்கும் கிடையாது. காங்கிரஸ் கட்சி அரசாங்கம் நடத்தும் போதும்கூட இந்த அழகுதான். பார்க்கப் போனால் இவ்வளவு இரண்டுங்கெட்டான் வேலையைச் செய்ததே காங்கிரஸ்தான். மற்றவர்கள் இப்போதுதானே பதவிக்கு வந்து கொண்டிருக்கிறார்கள்.

பத்திரிகைகளும் வானொலியும் எந்தநேரமும் பொது மக்களுக்கு எதையாவது சொல்லிக் கொண்டேயிருக்கும் போது அரசாங்க விளம்பர இலாகா தேவை இல்லை. அவசியமென்றால் பொதுமக்கள் வினவும் போது அவர்களுக்கு வேண்டிய தகவல்களைக் கொடுத்து உதவும் பணி ஒன்றே இந்த இலாகாவுக்கு முக்கிய பணியாக ஆக்கலாம். அன்றாடம் அரசாங்கத்தை அணுக வேண்டியிருக்கும் பொதுமக்களுக்கு எந்தக்காரியத்தை யாரைப் பிடித்து சாதித்துக்கொள்ள வேண்டும் அதற்கு என்னென்ன சட்டங்களை அனுசரிக்க வேண்டும் என்று வழி காட்டும் தொண்டுபுரிய இந்த இலாகா பயன்பட்டால் பெரிதும் உபகாரமாகவாவது இருக்கும்.

—

# அனாதைச் சிறுவர்களுக்கு

ஸ்ரீ ராமகிருஷ்ண குடில் தமிழ்நாட்டிலுள்ள தாய் தந்தை இருவருமேயற்ற ஏழை அனாதைச் சிறுவர்களுக்கென்றே ஏற்பட்டுள்ள தனிப்பெரும் தர்ம ஸ்தாபனம். அவர்களுக்காகவென்றே குருகுலமும் (ஹாஸ்டல்) வித்யாலயமும் (ஹைஸ்கூல்வரை) இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்டும் (பம்ப் செட் உற்பத்தியும், பயிற்சியும்) ஏற்பட்டிருக்கின்றன. இதுசமயம் 300-க்கு மேற்பட்ட சிறுவர்கள் இங்குப் புகலிடம் பெற்று இறையருளால் வாழ்ந்து வருகின்றனர்.

ஜாதி, மத, இன, கட்சி பேதமின்றி மனித சமுதாயம் முழுமைக்கும் இங்கு புகலிடம் பெற உரிமையுண்டு. 9 வயது முதல் 14 வயது வரையுள்ள சிறுவர்களை மட்டுமே எடுத்துக் கொண்டு, அவர்களுக்காக உணவு, உடை, இருப்பிடம், கல்வி, தொழிற்பயிற்சி ஆகியன யாவும் அவர்கள் ஆளாகும் வரை முற்றும் இலவசமாக வழங்கப்படுகிறது. ஸ்தாபனம் ஏற்பட்ட காலத்திலிருந்து இங்குச் சேர வந்த எந்த ஒரு சிறுவனுக்கும் எங்கள் விதிக்குப் பொருத்தமாயிருந்து "இடமில்லை" என்று இதுவரை மறுத்ததில்லை. இந்தத்தர்ம ஸ்தாபனத்தின் இலட்சியமே யாரும் ஆதரிப்பாரின்றி அவல நிலையில் திரியும் தாய்தந்தை இருவருமேயற்ற அனாதைச் சிறுவர்கள் தமிழ்நாட்டில் 'யாருமே இனி இல்லை' என்ற நிலையை ஏற்படுத்துவது தான்.

மே மாதத்தில் மட்டும் பல நூற்றுக்கணக்கான விண்ணப்பங்கள் வந்திருக்கின்றன. ஆனால் பெரும்பாலும் மிக மிக அதிகப்படியாக தங்கள் தங்கள் குழந்தைகளை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றே கோரப்பட்டிருக்கின்றன.

ஆகையால் பத்திரிக்கைகளில் நாங்கள் வெளியிட்டிருக்கும் விதிகளை சிறிது கவனம் செலுத்தி நன்றாகப் புரிந்துகொண்டு, தாயும் தந்தையும் இருவருமேயில்லாத சிறுவர்களாக இருந்தால்மட்டுமே இங்குச்சேர்ப்பதற்கு விண்ணப்பம் செய்ய வேணுமாய் பொதுமக்களுக்கு அன்புடன் அறிவிக்கப்படுகிறது.

தலைவர்
ஸ்ரீ ராமகிருஷ்ண குடில்
திருப்பராய்த்துறை அஞ்சல்
திருச்சி மாவட்டம்.

# குரங்கிலிருந்து தோன்றிய மனிதன்

எல்லாப் பிராணிகளும் தங்களுக்குள் ஒன்றுக்கொன்று மரியாதையுடன் நடந்துகொண்டன. ஆனால் குரங்கை மட்டும் எவருமே மதிக்கவில்லை; ஏனெனில் அது சதா முட்டாள்தனமாக எதையாவது செய்து கொண்டிருந்தது. ஒருநாள் குரங்கு கூறிற்று: மனிதனே என்னிடமிருந்துதான் தோன்றினான்!'

அதற்கு மனிதன் பதிலளித்தான்:

"இதோபார், முட்டாளே! நான் சிங்கத்திலிருந்தோ காண்டா மிருகத்திலிருந்தோ தோன்றியிருந்தால்கூட நன்றாக இருந்திருக்கும்."

"பூ! என்ன பெரிய சிங்கம்," என்று கூறி சிங்கத்தை வலித்துக் காட்டிற்று குரங்கு.

பின்னர் சற்று யோசித்தது.

"இதோ பார், எல்லோரும் தான் சிங்கத்திலிருந்தோ, காண்டா மிருகத்திலிருந்தோ தோன்றியிருக்கக் கூடாதா என்றுதான் எண்ணுகின்றனர். நான் எல்லோரையும் வலித்துக் காட்டிக் கொண்டிருக்கிறேன்; ஏன் தெரியுமா? நான் நானாகவே இருக்க விரும்பாதால்தான்."

"ஐயோ பாவம்!" என்று வருத்தப்பட்டான் மனிதன்

"நான் ஏதோ முணுமுணுக்கிறேன் என்று கருதாதே; அது என் வழக்கமல்ல; நான்வேறுயாராகவாவது இருக்க விரும்புகிறேன்; மனிதத் தன்மையுடன் என்னை நடத்தவேண்டும். அவ்வளவுதான்; அதற்காகவாவது நீ என்னிலிருந்து தோன்றியவனாக இருந்தால் என்ன?" என்றது குரங்கு.

அவ்வாறு கூறி முடிந்தவுடன், அது முகத்தை ஒரு மாதிரியாக வைத்ததில், மனிதனது சாயல் தோன்றத்தான் செய்தது; எனினும் மனிதன் அதைக் கவனிக்க முடியவில்லை; அவன் வேறு ஏதோ சிந்தனையில் ஈடுபட்டிருந்தான்.

அவன் தனக்குள்ளாகவே எண்ணினான்.

"சீ! என்ன உலகம் பார்த்தாயா? துணிச்சல்தான் இன்று வேண்டியிருக்கிறது; பலமுள்ளவனே வெற்றி பெறுகிறான்; ஒவ்வொருவரும் யானையிலிருந்தோ, சிங்கத்திலிருந்தோ தோன்ற நினைக்கிறானே தவிர, குரங்கிலிருந்து தோன்றியவனாகக் கருத விரும்பவில்லை." இவ்வாறு எண்ணிய மனிதன் குரங்கிடம்,

"சரி, சரி! நான் உன்னிலிருந்தே தோன்றுகிறேன்," என்று கூறி அதன் கைகளைப் பற்றிக் குலுக்கினான்.

பிற மிருகங்களுக்கெல்லாம் இதைக் கண்டு எரிச்சல் உண்டாயிற்று என்றாலும், மனிதன் குரங்கிலிருந்தே தோன்ற விரும்பினான்; ஏனெனில் அவனிடம் மனிதத்தன்மை இருந்ததே!

---

(பாலன்ஸ் ஷீட் தொடர்ச்சி)

பாங்கின் முன்னேற்றத்திற்கு உறுதுணையாக இருந்து வந்த பங்குதாரர்களுக்கும், டிப்பாசிட்டர்களுக்கும், இதர வாடிக்கைகாரர்களுக்கும், நிர்வாக சபையார் தங்களது நன்றியைத் தெரிவித்துக்கொள்வதுடன், இனியும் தொடர்ந்து பாங்கின் முன்னேற்றத்திற்கு ஆதரவு அளிக்க கோருகின்றார்கள்.

சிப்பந்திகள் ஊக்கத்தோடும் கடமை உணர்ச்சியோடும் பணியாற்றி வருவது போற்றுதற்குரியது.

(நிர்வாக சபையார் உத்திரவுப்படி)

(Sd.) M. வீரராகவலு நாயுடு.
நிர்வாக சபைத் தலைவர்,
தென்னூர்,
திருச்சிராப்பள்ளி-1.
16-2-1967

[3-ம் பக்கத் தொடர்ச்சி]

உணவு மிகுதியும் உதவும் என்று தெரிகிறது.

முக்கியமாகத் தானிய உணவையே நம்பியிருப்பவர்களுக்கு வேண்டிய புரதம் பால ஆஹாரில் இருக்கிறது. உண்ணும் உணவில், அதிலும் சிறு குழந்தைகள் உண்ணும் உணவில், புரதச் சத்து குறைபாடுமானால், அதனால் உண்டாகும் உடல் நலக் குறைபாடு ஒருநாளும் நீங்காததாகிவிடும் என்பதை இன்று [illegible] அதிகமாக உணர்ந்து வருகிறார்கள்.

துயர் துடைக்கும் பணிகளுக்காக அண்மையில் இந்தியாவுக்கு அமெரிக்கா அரசாங்கம் 2½ கோடி டாலர் (ரூ. 18.75 கோடி) கொடுத்தது. அதில் ஒரு பகுதி இந்தியாவில் பால ஆஹார் உற்பத்திக்காரரும். இனி எப்போதுமே புரதச் சத்துக்கு பால ஆஹார் நிலையான உணவுப் பொருளாக விளங்கும் என்று தெரிகிறது. எண்ணெய் அறவே இல்லாது பருத்திக் கொட்டைப் பிண்ணாக்கு இதனால் எப்போதும் விலை இருக்கும்.

இன்று பருத்திக் கொட்டை எண்ணெய் முன்னிலும் அதிகமாகக் கிடைக்கிறது. அதன் உற்பத்தியில் அரசாங்கத்துக்கு அக்கறை ஏற்பட்டிருப்பது இதற்கொரு காரணமாகும். சமையல் எண்ணெய்கள், வனஸ்பதி இவற்றின் விலைகள் இப்போது சில ஆண்டுகளாக மிகவும் ஏறிவிட்டன என்பது இந்தியப் பொதுமக்கள் அறியாததல்ல. விலைவாசி ஏறாமல் இருக்க வேண்டுமென்று இந்திய அரசாங்கம் நடவடிக்கை எடுத்தும், அதை மீறி வருகிறது பொருளாதார விதி. ஒரு நாட்டு மக்கள் ஆளுக்கு உட்கொள்ளும் கொழுப்புச் சத்தின் அளவு, அந்நாட்டின் வாழ்க்கைத் தரத்துக்கோர் அறிகுறியாகும். இந்தியாவின் வருவாய்கள் உயர்கின்றன; கொழுப்புச் சத்துக்கான தேவையும் உயர்கிறது.

மக்கள் தொகைப் பெருக்கத்திலும் தேவை உயர்ந்துள்ளது, ஆனால் அண்மையில் ஏற்பட்ட வறட்சியும் எண்ணெய் வித்துக்களின் உற்பத்தி மிகவும் கடுமையாகப் பாதிக்கப்பட்டுள்ளது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கடைசி ஆண்டாகிய 1965-66-ல் ஐம்பெரும் எண்ணெய் வித்துக்களின் விளைச்சல் இலட்சிய அளவுக்கு நூற்றில் 35 பங்கு குறைவாயிற்று.

ஆகவே பெருவாரியாகப் பயன்படாமல் இருக்கும் பருத்திக் கொட்டையின் மேல் அரசாங்கம் கவனம் செலுத்தத் தொடங்கியுள்ளது. பருத்திக்கொட்டை எண்ணெய் உற்பத்தி செய்வோருக்குச் சென்ற சில ஆண்டுகளாக அது ஊக்கமளிக்க முன்வந்துள்ளது. வனஸ்பதி உற்பத்தி செய்வோர் தங்கள் வனஸ்பதியில் பயன்படுத்தும் ஒவ்வொரு மெட்ரிக் டன் பருத்திக் கொட்டை எண்ணெய்க்கும் வரிச்சலுகை (ரூ. 70) வழங்கப்பட்டுள்ளனர். வெளிநாடுகளுக்குப் பருத்திக்கொட்டைப் புண்ணாக்கு ஏற்றுமதி செய்வதற்கும் ஊக்கம் அளிக்கப்படுகிறது - பருத்திக் கொட்டையிலிருந்து எண்ணெய் எடுத்துப் பிண்ணாக்கு உற்பத்தி செய்வதற்காக 20 சதவிகிதமும், எண்ணெய் எடுப்பதற்குக் கரைமங்களைப் பயன்படுத்தினால் மேற்கொண்டு 5 சதவிகிதமும் வரிச்சலுகை வழங்கப்படுகிறது. ஆனால் எண்ணெயை ஏற்றுமதி செய்யலாகாது என்பது சட்டம். எண்ணெய் இந்தியாவிலேயே தங்கிவிடுகிறது.

இத்தகைய வரிச்சலுகைகள் வருவதற்கு முன்பு, ஆண்டுதோறும் கிடைக்கும் பருத்திக் கொட்டையில் நூற்றுக்கு 20 பங்குக்குமேல் எண்ணெய் எடுக்கப் பயன்படவில்லையே. இன்னும், இது நூற்றுக்கு 35 பங்குக்கு மேல் போகவில்லை.

இந்தியாவில் பருத்தி ஏராளமான நிலத்தில் பயிராவதால், பருத்திக்கொட்டை எண்ணெய்க்கு நல்ல எதிர்காலமே தவிர, குறைஇருக்க முடியாது. கரைமங்களால் எண்ணெய் எடுக்கலாம் என்று இப்போது அரசாங்கம் அனுமதி அளித்துவிட்டதால், இதில் மேலும் ஆதாயத்துக்கு வழி உண்டாகிவிட்டது; ஏனெனில் கரைமங்களால் பருத்திக் கொட்டையிலிருந்து முன்னிலும் அதிகமாக எண்ணெயை எடுத்துவிடலாம்.

சென்னைப் பல்கலைக்கழக ஆராய்ச்சியினால். பொது மக்களுக்குச் சமையல் எண்ணெய் அதிகமாகக் கிடைக்கும்; பருத்திக்கொட்டைப் பிண்ணாக்கும் அதிகமாகி, புரதத்துக்கு அது ஒரு மலிவான பண்டமாகும்.

பருத்திக்கொட்டை எண்ணெய் எடுக்க மலிவான அல்லது சிறப்பான கரைமமுறை ஒன்றைக் கண்டுபிடிப்பதற்குச் சென்னைப் பல்கலைக்கழக ஆராய்ச்சி வழி காட்டுமானால், உடனே பல நாடுகள் அதுபற்றி அக்கறை கொள்ளும். வளர்ந்துவரும் உலக மக்கள் தொகைக்குச் சிறந்த புரத உணவுகளும் அதிகத் தாவர எண்ணெய்களும் தேவை.

ஆராய்ச்சி ஐந்து ஆண்டுகள் நடக்கும். ஆதரவாக மானியம் கொடுப்பது அமெரிக்க விவசாய இலாகாவின் விவசாய ஆராய்ச்சிப் பணிநிலையமாகும். அமெரிக்காவின் அமைதிப் பணி உணவுத் திட்டம் என்னும் பி. எல். 480 திட்டப்படி இந்தியாவுக்கு வழங்கப்படும் அமெரிக்க விளைபொருள்களின் விற்பனையினால் அமெரிக்க அரசாங்கத்துக்குக் கிடைக்கும் ரூபாய் நிதியிலிருந்து இந்த மானியத்தைக் கொடுக்கிறார்கள்.

| 1965 Rs. Ps. | LIABILITIES (continued) | Rs. Ps. | Rs. Ps. |
|---|---|---|---|
| | 8. ACCEPTANCES, ENDORSEMENTS AND OTHER OBLIGATIONS PER CONTRA: Nil | | |
| | 9. PROFIT AND LOSS ACCONT: | | |
| | Profit as per last Balance Sheet ... | 1,06,255 63 | |
| | Less: Appropriations | | |
| 77,301 95 | 1. Reserve Fund 20,670-00 | | |
| | 2. Provision for depreciation on Investments Nil | | |
| | 3. Provision for Income Tax 40,600-00 | | |
| | 4. Dividend at 15% per annum (taxable) 32,077-50 | | |
| | 5. Bonus to the Secretary (1 month pay and 3 months allowance 372-01 | | |
| | 6. Bonus to Staff (3 months pay) 12,000-32 | | |
| | 7. Girl's School Charity 35-80 | | |
| | 8. Staff Gratuity Fund 500-00 | | |
| | 1,06,255-63 | | |
| 1,06,255 63 | Add Profit for the year brought from the Profit and Loss Account. | 1,06,255 63 | 51, 317 15 |
| | 10. CONTINGENT LIABILITIES: | | |
| | In respect of guarantees given on behalf of constituents. Nil | | |
| 49,62,799 22 | TOTAL ... | | 52,97,787 97 |

| 1965 Rs. Ps. | ASSETS (continued) | Rs. Ps. | Rs. Ps. |
|---|---|---|---|
| 150 00 | (i) Payable in India | | |
| | (ii) Payable outside India Nil | | 14,320 93 |
| | 7. CONSTITUENTS' LIABILITIES FOR ACCEPTANCES ENDORSEMENTS AND OTHER OBEIGATION PER CONTRA: Nil | | |
| 39,384 03 | 8. PREMISES AT COST AS PER LAST BALANCE SHEET | 39,384 03 | |
| | Add Additions during the year Nil | | |
| 20,316 41 | Less: Depreciation written of date ... | 20,793 08 | |
| 19,067 62 | | | 18,590 95 |
| 30,977 90 | 9. FURNITURE AND FIXTURES AT COST AS PER LAST BALANCE SHEET | 30,977 90 | |
| | Add additions during the year | 1,799 10 | |
| | Less cost of Furniture written off as absolete ... | 32,777 00 | |
| 20,987 18 | Less: Depreciation written off to date .. | 22,141 23 | |
| 9,990 72 | | | 10,635 77 |
| | 10. OTHER ASSETS, INCLUDING SILVER: | | |
| 33,015 34 | (1) Interest accrued 7n Investments but not collected ... | 39,208 17 | |
| 64,014 97 | (2) Interest outstanding on loans but not collecied ... | 83,588 07 | |
| 6,878 27 | (3) Miscellaneous Advances ... | 10,432 74 | |
| 36,779 06 | (4) Income Tax Advance Payment | | |
| 99,500 00 | (5) Iueome-tax paid at source .. | 28,447 40 | |
| 2,40,187 64 | | | 1,61,676 38 |
| | 11. NON-BANKING ASSETS ACQUIRED IN SATISFACTION OF CLAIMS: | | |
| 5,154 00 | Property taken in court auction ... | 5,154 00 | |
| 128 85 | Less: Depreciation written upto date .. | 254 47 | 4,899 53 |
| 5,025 15 | 12. PROFIT AND LOSS Nil | | |
| 49,62,799 22 | TOTAL | | 52,97,787 97 |

27 வருஷ காலமாக அங்கம் வகித்து வந்த திரு. T. P. வேதாசலம் B.A அவர்கள் 1966-ஆம் ஆகஸ்ட்-மீ 31-உ முதல் ராஜினாமாசெய்து ஓய்வு பெற்றுக்கொண்டார். அவர் நமது பாங்குக்கு செய்துள்ள அரிய சேவையும், உண்மையான ஒத்துழைப்பையும் நிர்வாக சபையார் வெகுவாக பாராட்டுகிறார்கள்.

தவிர திருவெறும்பூரில் 29--9--1966-ல் ஒரு கிளை ஆபீஸ்திறக்கப்பட்டு வளர்ச்சி அடைந்து வருகிறது.

ரிசர்வ் பாங்க், நமது பாங்கை வேறு ஒரு ஷெட்யூல்ட் பாங்க் உடன் இணைக்க வேண்டும் என்று விருப்பம் தெரிவித்ததின் பேரில் இந்தியன் ஓவர்ஸீஸ்பாங்க் உடன் சேருவதற்கு ரிசர்வ் பாங்கின் அனுமதி கோரியிருந்தோம். ரிசர்வ் பாங்கும், இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்குடன் நமது பாங்கை இணைப்பதற்கு அனுமதி அளித்துள்ளது. மேற்கொண்டு பேச்சுவார்த்தை நடத்துவதற்கு 3டைரக்டர்கள் அடங்கிய ஒரு கமிட்டியை நிர்வாகசபையார் 22-2-67உ நியமனம் செய்துள்ளார்கள் என்கிற விஷயத்தை பங்குதாரர்களுக்கு தெரிவித்துக்கொள்கிறோம்.

சென்ற வருடத்தில் பாங்கின் எல்லா அலுவலகங்களிலும் திருப்தி அளிக்கும் வகையில் வரவு, செலவு அதிகரித்துள்ளது. பங்குதாரர்கள் வருமான வரி இலாகாவில் இருந்து Exemption Certificate ஐ 6-4-1967க்குள் பாங்குக்கு வந்துசேரும்படி அனுப்பி வைத்தால் அவர்களுக்கு டிவிடெண்ட் தொகையில் 22%ஐ கழிக்காமல் முழுத் தொகைக்கும் டிவிடெண்ட் கொடுக்கதுவாக இருக்கும்.

[5-ம் பக்கம் பார்க்க]

## PROFIT AND LOSS ACCOUNT FOR THE YEAR ENDED 31—12—1966

| 1965 Rs. Ps. | EXPENDITURE | Rs. Ps. | 1965 Rs. Ps. | INCOME: (Less Provision made during the year for Bad and Doubtful Debts and other usual or necessary Provisions) | Rs. Ps. |
|---|---|---|---|---|---|
| 2,28,462 63 | 1. Interest paid on deposits, borrowings etc. ... | 2,54,900 41 | 4 48,944 04 | 1. Interest and Discount ... | 4,56,050 54 |
| 90,481 37 | 2. Salaries and Allowances aud provident Fund including Bonus ... | 1,12,376 36 | 816 67 | 2. Commission, Exange and Brokerage ... | 736 24 |
| 4,222 00 | 3. Directors' and Local Committee Members fees and allowances ... | 3,080 00 | 1,200 00 | 3. Rent | 1,500 00 |
| 11,823 49 | 4. Rent, Taxes, Insurance, Lighting etc. | 28,229 69 | | 4. Net profit on sale of investments, gold and silver, land, premises and other assets (not credited to Reserve or any particular Fund or account) Nil | |
| 318 92 | 5. Law Charges | 150 00 | | | |
| 1,592 36 | 6. Postage, Telegrams and Stamps ... | 1,800 14 | | | |
| 700 00 | 7. Auditor's Fees for Audit 1000—00 ... | 1,050 00 | | | |
| | For other work to Auditor 50—00 ... | | | 5. Net Profit on revaluation of investments, gold and silver, land, permises and other assets (not credited to Reserve or any particular Fund or account) | |
| 2,352 73 | 8. Depreciation on and repairs to the Banking Company's Property ... | 2,237 41 | | | |
| 4,695 01 | 9. Stationery. Printing, Advertisement etc. | 3,683 20 | | | |
| | 10. Loss from Sale of or dealing with non-banging assets Nil | | | 6. Income from non-banking assets and Profit from sale of or dealing with suoh assets ... | |
| 6,812 33 | 11. Other Expenditure ... | 4,937 66 | 3,844 13 | 7. Other receipts ... | 5,475 24 |
| 1,03,344 00 | 12. Balance of Profit | 51,317 15 | | 8. Loss (if any) ... | |
| 4,54,804 84 | Total ... | 4,63,762 02 | 4,54,804 84 | TOTAL ... | 4,63,762 02 |

NOTE:— Particulars of remuneration relating to the chief executive officer (Secretary) showing separately all payments made or provided during the year in respect of each of the following items and the total of all such items, namely :- (i) Salaries 3,660-00; (ii) Allowances 600-00 (iii) Sitting fees Nil; (iv) Bonus 982-01; (v) Employer's contributions to provident fund, pension fund or any other Superannuation fund 305—92; (vi) Payment by way of gratuities, pensions or other wise, in excess of the emloyer's contribution and interest thereon and Nil; (vii) The monetary value of any other benefits or perquisites Nil. Total Rs. 5,547-93.

Directors :—

Tiruchirapalli, (Sd.) A. CHIDAMBARAM PILLAI, (Sd.) T.R. AGNISWAMY, (Sd) S. KRISHNASAMY IYENGAR. M.A.,B.L., (Sd:) M. VEERARAGHAVALU NAIDU, Director—President.

„ T. S. SIVAPRAKASAM, „ T.M. RAJARATNAM „ R. SATHANANTHAM (Sd.) M. RANGARAJAN, Secretary.

Dated: 16-2-1967 „ G. VENKATACHALAMPILLAI „ T.R. KRISHNASAMI „ V. R. SUNDARARAJULU.

AUDITOR'S REPORT: I have audited the Balance Sheet of the Tiruchy United Bank Ltd, Tiruchirapalli, as at 31st December, 1966 and also the Profit and Loss Account of the Bank for the year ended thatdate in which are incorporated the returns of the 6 branches. In accordance with the provisions of section 29 of the Banking Regulations Act, 1949 read with the provisions to sub Sections (1) and (2) of section 211 adn Sub Section (5) of section 211 and Section 227 (5) of the Companies Act. 1956, the balance Sheet and Profit Loss Account are not required to be and are not drawn up in accordance with the Sixth Schedule of the Companies Act 1956. They are therefore drawn up in conformity with Forms A and B of the Third Schedule to the Banking Ragulation Act 1949. I report that (a) I have obtained all the informations and explannation which, to the best of my knowledge and belief were necessary for the purpose of my audit and have found them to be satisfactory, (b) the transactions of the Bank which have come to my notice, have been within the powers of the Bank (c) in my opinion proper books of account as required by law have been kept by the Bank so for as appears from my examination of those books and proper returns adequate for the purpose of my audit have been received from the branches of the Bank (d) the Bank balance sheet and Profit and Loss Account dealt with by the report are in agreement with the books of account and the returns; (e) in my opinion, and to the best of information and according to the explanations, given to me, the said accounts give the information required by the Companies Act. 1956 in the mannea so required for Banking Companies and on such basis, the said Balance Sheet gives a true and fair view of the state of affairs of the Bank as at 31st December. 1966 and the profit and Loss Account gives a true and fair view of the balance of the Profit for the year ended that date; (f) I have personally visited and audited the occounts of the branches of the Bank.

Tennur, Tiruchy: 16—2—67. (Sd.) A. MARAMA REDDY, G.D.A., & F. C. A. Chartered Accountant.

[1-ம் பக்கத் தொடர்ச்சி]

நமது பார்லிமெண்டு நடவடிக்கைகளில் மேலும் நகைச்சுவை இருக்கவேண்டும் என்று நான் கருதுகிறேன். பிரிட்டனில் தொழிற்கட்சி அரசாங்கம் இருந்தபோது, பிரிட்டிஷ் மக்கள் எரிபொருளை மிச்சப்படுத்தும் பொருட்டு குளிக்காமல் இருக்கவேண்டும் என்று ஒரு மந்திரி யோசனை கூறியதால் அந்த அரசாங்கத்தை அழுக்குப்பிடித்த அரசாங்கம் என்று ஏன் அழைக்கக்கூடாது என்று ஸ்ரீ சர்ச்சில் வினவினார். இது போன்ற வேடிக்கையான கருத்துக்கள் நமது பார்லிமெண்டில் இன்னும் ஏராளமாக இருக்கவேண்டும்.

தொழிலாளர் யூனியன்கள் பற்றிய சட்டங்களைத் திருத்துவது பற்றியும் வேறு சர்ச்சைக்கு இடமளிக்காத பிரச்னைகளைப்பற்றியும் தாக்கலாகும் மசோதாக்கள் சம்பந்தமாக நடக்கும் உருப்படியான விவாதங்கள் பற்றிய செய்திகளை இந்தியப் பத்திரிகைகள் மேலும் வெளியிட வேண்டுமென்று நான் விரும்புகிறேன். ஊழலை ஒழிக்கும் திறன் எந்த அளவுக்கு இருக்கிறதோ அந்த அளவுக்குத்தான் ஜனநாயகம் வெற்றி பெறும் என்பது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மை. நாட்டில் ஊழலுக்கு எதிரான சூழ்நிலை நிலவுவதற்கு இந்தியாவிலுள்ள பத்திரிகைகள் பெரிதும் உதவிபுரிந்துள்ளன.

பார்லிமெண்டில் உரிமைகள் பற்றி ஒரு பெரிய பிரச்னை இருந்துவருகிறது. இவற்றை நன்கு நிர்ணயித்து முறைப்படுத்தவேண்டும் என்பது என் கருத்து. தனது நடவடிக்கைகளை நிர்ணயிக்கும் முழு அதிகாரம் பார்லிமெண்டுக்குத்தான் உண்டு என்பதையும் பார்லிமெண்டின் சுதந்திரத்தில் நீதிமன்றங்கள் தலையிடக் கூடாது என்பதையும் நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் பார்லிமெண்ட் உறுப்பினர்களின் உரிமைகள் யாவை என்று தெரிந்துகொள்ளும் உரிமை பொதுமக்களுக்கு உண்டு. பார்லிமெண்ட் உறுப்பினர்களுக்கு எதிராகப் பத்திரிகைகளில் வெளியாகும் குற்றச்சாட்டுகள்பற்றி புலன் விசாரணை நடத்துவதற்கென இந்தியப் பார்லிமெண்ட் ஒரு கமிட்டியை அமைக்கவேண்டும்.

இந்தக் குற்றச்சாட்டுக்கள் ஆதாரமற்றவை என்று தெரிந்தால்தான் இந்த விஷயத்தை உரிமைகள் கமிட்டிக்கு அனுப்பவேண்டும்.

பயனுள்ள பல யோசனைகளைப் பத்திரிகைப் பிரதிநிதிகள் பார்லிமெண்ட் உறுப்பினர்களுக்குத் தெரிவித்திருக்கிறார்கள் என்பதை யாரும் மறுக்கமுடியாது. பார்லிமெண்ட் விவாதங்களுக்கு இந்த யோசனைகள் பெரிதும் உதவிபுரிந்திருக்கின்றன.

இந்நாட்டில் பத்திரிகைகள்மீது எவ்வித நிர்வாகக் கட்டுப்பாடுகளும் விதிக்கப்படாமல் இருந்து அவை சுதந்திரமாக தொடர்ந்து இயங்கிவந்தால் நம் நாட்டின் ஜனநாயகத்திற்கே அது ஒளி தரும். ஆசிய நாடுகளைப் பொறுத்தமட்டில் இந்தியாவிலுள்ள பத்திரிகைகள் பார்லிமெண்ட் ஜனநாயக முறைக்கு விசுவாசமுள்ள ஒரு நண்பனைப்போல உழைத்து ஒரு சிறந்த உதாரணமாக விளங்குகின்றன என்றால் சற்றும் மிகையாகாது. ஜனநாயகத்துக்கும் பார்லிமெண்ட் முறைக்கும் பத்திரிகைகள் புரிந்துள்ள சேவைகளை இந்தச் சந்தர்ப்பத்தில் குறிப்பிடுவது மிகவும் உசிதமாகும்.

நாட்டுக்கு சிறப்புச் சேவைபுரிந்துள்ளவர்களின் உருவச்சிலைகளைப் பார்லிமெண்டின் மத்திய மண்டபத்தில் வைப்பதும் அவர்களுடைய உருவப்படங்களைப் பார்வைக்கு வைப்பதும் இந்தக்காலத்தில் சாதாரணமாக செய்யப்படுவதாகும். பார்லிமெண்ட் முறையிலான ஜனநாயகத்துக்காகப் பத்திரிகைகள் செய்துள்ள சேவையைப் பார்க்கும்போது, பெயர் தெரியாத ஒரு பத்திரிகையாளரின் உருவச்சிலையை பார்லிமெண்ட் வளவுக்குள் வைக்கவேண்டும் என்று நான் கருதுகிறேன்.

திரு. ஏ. டி. மணி
பார்லிமெண்ட் உறுப்பினர்.





## ஸ்ரீ ராமகிருஷ்ண குடிலுக்கு ஒரு இலட்சம் ரூபாய்

——

திருச்சி திருப்பராய்த்துறையிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண குடிலில் தமிழ்நாட்டைச் சேர்ந்த அனாதை மாணவர்கள் 300 பேர்களுக்கு மேல் இருந்து வருகிறார்கள்.

அவர்களுக்காக ஒரு ஹாஸ்டலும், ஒரு ஹைஸ்கூலும் நடப்பதுடன் ஒரு இண்டஸ்ட்ரியல் எலெக்ட்ரிக் மோட்டார், பம்பு செட் வகையறா உற்பத்தி செய்வதற்கும் ஐந்து இலட்சம் ரூபாய் மூலதனத்தில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

அருட்பெருந் திரு. திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் ஷை தொழிற்சாலையின் நிரந்தர நிதி வளர்ச்சிக்காக திருச்சி நேஷனல் ஹைஸ்கூல் மைதானத்தில் 6-5-1967 முதல் 24-5-67 வரை கம்பராமாயண விரிவுரை விழா ஒன்று நடத்தி, ஒரு இலட்சம் ரூபாய் நிதி வசூலித்து, குடில் நிர்வாகி பிரம்மசாரி ராமசுவாமி அவர்களிடம் வழங்கினார்.

திருச்சி கலெக்டர் திரு. கே. எஸ். நரசிம்மன், டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜ் திரு. சியாமதாஸ், திரு. மா. பொ. சி, திரு. பொள்ளாச்சி என். மஹாலிங்கம், திரு. கி. ஆ. பெ. விஸ்வநாதம், திரு. ஆ. வெ. ரா. கிருஷ்ணசாமி ரெட்டியார் ஆகிய பிரமுகர்கள் விழாவில் கலந்து கொண்டு பேசினார்கள். ஒவ்வொரு நாளும் பல்லாயிரக் கணக்கான மக்கள் கூட்டம் கூடி ராமாயணப் பிரவசனத்தைச் சிரவனம் செய்தார்கள்.

——

Edited and Published by its owner Sri Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2.
Annual Subscription Including 4 special numbers Rs. 10.